25th April 1960]

*Co-operative farm*

* 808 Sri S. THANGAVELU : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) கடலூர் தாலுகாவில் திருவாமூர் கிராம ஹரிஜன விவசாயி களைக்கொண்டு கூட்டுப் பண்ணை நடத்தத் திட்டம் ஏதேனும் பரிசீலனையில் இருக்கிறதா ?

(ஆ) அப்படியானால் அதற்கான நடவடிக்கைகள் எப்பொழுது எடுத்துக்கொள்ளப்படும் ?

(இ) சர்க்கார் மேற்படிக் கூட்டுப் பண்ணைக்கு எடுக்கப்போகும் நிலத் தின் விஸ்தீர்ணம் என்ன ?

The Hon. Sri P. KAKKAN : (அ) & (ஆ) Proposals have been received from the Registrar of Co-operative Societies. They are under the consideration of the Government.

(இ) 107.87 acres.

Sri S. THANGAVELU : கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது எடுக்கப்போகும் இடங்கள் நூறு ஏக்கர்களுக்கு மேலாக இருப்ப தால், இந்த நிலங்களை சர்க்காரிலிருந்து டிராக்டர் மூலமாக மராமத்து செய்யப்படுமா அல்லது ஏழை விவசாயிகளை வைத்து மராமத்து செய்யப் படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri P. KAKKAN : கூட்டுறவு விவசாயம் அமைக்கும் போது அரசாங்கத்தின் மூலமாக எல்லா உதவிகளும் செய்து கொடுப்ப தற்கு திட்டமிடப்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர் அவர்கள் அரிஜன மக்கள் கூட்டுறவுப் பண்ணைக்கு அரசாங்கம் என்னென்ன நன்மைகள் உதவிகள் செய்து கொடுக்கப்போகிறது என்பதை நான் வாசிக்கப்போகும் விவரங்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

1. ஷேர் காப்பிடல்—(மூலதனத்திற்காக) வகையில் 10 ரூபாய் வீதம் 25 பேர்களுக்குக் கொடுக்கலாம் என்பது.

2. விதை வாங்குவதற்கு ஏக்கர் ஒன்றுக்கு ஐந்து ரூபாய் வீதம் 100 ஏக்கர்களுக்கு வரை கொடுப்பது.

3. ஒரு ஏக்கருக்கு ஐந்து ரூபாய் வீதம் உரம் வாங்குவதற்கு 100 ஏக்கர்களுக்குக் கொடுக்கிறார்கள்.

4. மாடுகள் வாங்குவதற்கு ஒரு ஜோடிக்கு 400 ரூபாய் வீதம் 25 ஜோடிகளுக்குக் கொடுப்பது. இதில் பாதி கடனாகவும், பாதி இனா மாகவும் கொடுக்கப்படும்.

5. நிலங்களைச் செப்பனிடுவதற்காக ஏக்கர் ஒன்றுக்கு 25 ரூபாய் வீதம் 100 ஏக்கர்களுக்குக் கொடுக்கிறார்கள்.

6. பம்பு செட்டு வைத்துக்கொள்ளுவதற்கும் கிணறு வெட்டுவதற் கும் சேர்ந்து கிணறு ஒன்றுக்கு 2,000 ரூபாய் கொடுக்கிறார்கள். இதில் பாதி கடனாகவும், பாதி இனாமாகவும் கொடுக்கிறார்கள்.

7. விவசாய சாமான்கள், கலப்பைகள் முதலியவைகள் வாங்கு வதற்கு நபர் ஒன்றுக்கு 50 ரூபாய் கடனாகக் கொடுக்கிறார்கள்.

8. அங்கிருந்து வேலை செய்வதற்காக நிதி உதவியாக நபர் ஒன் றுக்கு 180 ரூபாய் வீதம் ஆறு மாதத்திற்குக் கொடுக்கிறார்கள். இதில் பாதி இனாமாகவும், பாதி கடனாகவும் கொடுக்கிறார்கள்.

9. வீடுகள் கட்டிக்கொள்வதற்காக வீடு ஒன்றுக்கு 50 ரூபாய் வீதம் கொடுக்கிறார்கள்.

[25th April 1960

10. மாட்டுக் கொட்டகை (காட்டில் ஷெட்) கட்டுவதற்காக ஷெட் ஒன்றுக்கு 25 ரூபாய் கொடுக்கிறார்கள்.

11. கூட்டுப் பண்ணை நடத்தும்போது, அங்கு ஒரு மேனஜர் நியமிக்க வேண்டியிருக்கும். அவருக்கு சம்பளமாக மாதம் ஒன்றுக்கு 100 ரூபாய் வீதம், மூன்று வருடங்களுக்குக் கொடுக்கிறார்கள்.

இவ்விதமான பல உதவிகளைச் சர்க்கார் செய்து கொடுப்பார்கள்.

SRI R. KRISHNASAMI NAIDU: கூட்டுறவு நிலக் குடியேற்றப் பண்ணைகள் அமைப்பதற்குரிய நல்ல நிலங்கள், நூற்றுக்கணக்கான எக்கர்கள், தனியார் வசம் அபிவிருத்தி செய்யப்படாமல் இருக்கின்றன. அப்படிப்பட்ட இடங்களில் ஹரிஜனங்களைக் குடியேற்றி கூட்டுப் பண்ணைகளையும் அமைக்கலாம். எனவே அந்த நிலங்களை ஹரிஜனங்களுக்காக விலைக்கு வாங்குவதற்காக அதற்கு வேண்டிய தொகையை ஹரிஜனங்களுக்கு நீண்ட காலக் கடனாகவோ, மானியமாகவோ ஒரு பகுதியையோ கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN: நான் சிறிது நேரத்திற்கு முன்பு சொன்ன திட்டம்; ஏற்கனவே சர்க்கார் நிலங்கள் வீணாகக் கிடந்தால் அவைகளில் நல்ல முறையில் கூட்டுறவுப் பண்ணைகள் அமைப்பதுதான். நிலங்களைக் கனம் அங்கத்தினர் கூறியது போல ஹரிஜனங்களுக்காகக் கிரயத்திற்கு வாங்கும் திட்டம் ஹரிஜன இலாகாவில் இல்லை.

SRIMATHI A. S. PONNAMMAL: கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் குறிப்பிட்ட 100 எக்கரிலும் 8 கிணறுகள் வெட்ட ,கிணறு ஒன்றுக்கு 2,000 ரூபாய் வீதம் பணம் கொடுக்கப்படுவதாக அவர் சொன்னார். அந்த 2,000 ரூபாயும் மானியமாகக் கொடுக்கப்படுகிறதா, அல்லது கடனாகக் கொடுக்கப்படுகிறதா ? அதே மாதிரி வீடுகள் கட்டுவதற்கும் பணம் கொடுக்கப்படுவதாக கனம் அமைச்சர் சொன்னார். அந்தப் பணமும் மானியமாகக் கொடுக்கப்படுகிறதா, அல்லது கடனாகக் கொடுக்கப்படுகிறதா, மானியமானால், எவ்வளவு பணம் மானியமாகக் கொடுக்கப்படுகிறது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: கிணறுகள் வெட்டுவதற்குக் கொடுக்கப்படும் 2,000 ரூபாயில் பாதித் தொகை கடனாகவும், பாதித் தொகை இனாமாகவும் கொடுக்கப்படுகிறது. அதே மாதிரி வீடுகள் கட்டுவதற்கு கடனாகவும், 50 ரூபாய் இனாமாகவும் கொடுக்கப்படுகிறது.

SRI S. NAGARAJA MONIGAR: இப்போது ஃபார்ம் ஒன்றுக்கு சர்க்கார் செலவிட நினைத்திருக்கும் தொகையை அந்த ஃபார்மின் உற்பத்தியின் மூலமாக எத்தனை வருடங்களில் திரும்பப் பெற முடியும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN: அந்தத் தகவல் என்னிடம் இல்லை. அதற்கு அனேகமாக 20 வருஷங்கள் ஆகும் என்று நான் நினைக்கிறேன்.

SRI T. T. DANIEL: Sir, may I know whether this is a Union sponsored scheme or State sponsored scheme ? May I also know the number of such co-operative farms which have already been organized in the State ?

THE HON. SRI P. KAKKAN: இது மத்திய சர்க்காரும், மாநில சர்க்காரும் சேர்ந்து நடத்தும் திட்டம். கனம் அங்கத்தினர் போட்டுள்ள இன்னொரு கேள்விக்கான விவரம் என்னிடம் இப்போது இல்லை. அந்த விவரத்திற்குத் தனிக் கேள்வி போட்டால், எத்தனை காலனிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன என்ற இந்த விவரத்தைச் சொல்வேன்.